

தலைப்பு: வெயில் தோரணம்
களம்: புனைவு
ஆசிரியர்: மோகனசுந்தரம்
காப்புரிமை: ஆசிரியருக்கே
தொகுப்பாசிரியர்கள்: நீதா வாசு, ஷான் மொகம்மத்
உருவாக்கக்குழு: பேபி ஜான், பியூஸ் கே ஜார்ஜ், மினி
பதிப்பாசிரியர்கள்: வின்சென்ட் காபோ, லிஜி ஸ்ரீதரன்
மின்னூல் பதிப்புரிமை & வலைப்பூ வெளியீடு: **தி** ஆரா *பிரஸ் &*
Komalimedai.blogspot.in
மின்னஞ்சல்: sjarasukarthick@rediffmail.com
அட்டைவடிவமைப்பு மற்றும் நூலழகு: Muralwall
நூல்வெளியீடு: மே, 2015



# ஈரிதயங்களின் லோக்கல் கால் !!!

இனிய நண்பர்களுக்கு இந்த மின் நூல் மழைக்காலத்தின் ஒரு சிறுவெயில் பொழுது நூலின் இரண்டாம் பகுதி என்றும் கூட இதனைக்கொள்ளலாம். இதில் முந்தையதை விட தவிப்புகள், காதல், போராட்டம், வலிகள் என அனைத்துமே வெயில் கிரகணம் போல இயல்பாக உள்ளது. நாம் இதனை நூலாக்குவதன் காரணமும் அதுவேதான். இது காதல்பருவத்தில் இதயங்களிடையேயான ஒரு லோக்கல் கால் என்று கூட சொல்லலாம். பின்பகுதியில் உள்ள கடிதங்களில் வெளிப்படும் உணர்வுகள் இன்றிருப்பதைக்காட்டிலும் வேறுவிதமானவை. சுதந்திரமாக ஒரு மனம் வெளிப்படுவது அந்தரங்கமான தன்னை தானே நேரில் சந்தித்துக்கொள்ளும் தருணத்தில்தான் அல்லவா? அனைத்து மனிதர்களுக்கும் மூன்று வித வாழ்க்கைகள் இருக்கின்றன. இந்த நூலில் கூறப்படுவதும் அதில் ஒன்றுதான். அவை கிராமம் சார்ந்து கட்டுப்பாடுகளுடன் வாழ்பவன் எல்லையற்ற வெளியை தன் வாழ்வில் இளம் வயதில் திடீரென சந்திக்கிறான். அவன் என்ன செய்கிறான் என்பதுதான் இந்த நூலில் நீங்கள் வாசிக்கப்போகிறீர்கள்.

இந்த நூலில் ஆணின் மனப்பாங்கு மட்டுமல்லாது பெண்ணுக்கான இடமும் உள்ளதை பவி, சுபா எழுத்துகளில் வழி வாசிப்பவர்கள் உணரமுடியும். பெண்ணுக்கான எல்லை தொடர்ந்து அவள் உடையில், உணவில், செயலில் என சமூகம் தொடர்ந்து வரையறுத்துக் கொண்டே உள்ளது. அத்தடைகள் ஏற்படுத்தும் உளவியல் சிக்கல்களை அதன் விளைவுகளை இன்று நாம் தொடர்ச்சியாக சந்தித்துக்கொண்டே இருக்கிறோம். மிக எளிதாக வாசிக்கமுடியும் இந்தப்பிரதியின் ஒவ்வொரு எழுத்தும் அவை உருவாக காரணமான சூழ்நிலையின் தன்மையை விளக்கும் என்று நம்புகிறோம். நன்றி!

அன்புடன்

நீதா வாசு
ஷான் மொகம்மத்
மற்றும் ஆரா பிரஸ் குழு.

## 1

என்னுடைய
பிரியங்களை புரியவைக்க
அன்பில் நிறைந்த ஒரு மொழியை உருவாக்கினேன். நீயோ மிரட்சியுடன் கடந்துபோகிறாய்..
ஆங்கிலம் பேசும் ஆப்ரிக்கனை கண்ட கிராமத்துவாசி போல....

## 2

### நடந்தது என்னன்னா.....

அந்த விபத்து அப்போதுதான் நிகழ்ந்திருக்கவேண்டும்
குருதியின் ஈரத்தில் ஈக்கள்
அங்கங்கே சதைத்துணுக்குகள்
போக்குவரத்து இயல்பிற்கு வந்திருந்தது
அருகிலிருந்தவர் என்ன ஆச்சு என்றார்..
நான் இப்போதுதான் வந்தேன் என்றேன்
ஆள் காலியா ? என்றார்
தெரியலை என்றேன்
பாதசாரியா? வண்டியில் வந்தவரா? என்றார்
நான் பார்க்கும்போது எதுவும் இல்லை என்றேன்
ரத்தம் நீர்த்துப்போயிருந்தது
ஈக்கள் வேறு இடம் நகர ஆரம்பித்துவிட்டது
காத்திருந்த பேருந்தும் வந்துவிட்டது.

## ஜனவரி 1

தண்ணீர் தேசம்
ஆசையை துப்பு; ஞானம் வரும்
அச்சம் துப்பு; வீரம் வரும்
ரகசியம் துப்பு; தூக்கம் வரும்

## ஜனவரி 3

புதுத்தாலி மணம் போகுலியே
குங்குமமும் கலையலியே
தேசம் காக்க வானம் பாத்துப் போனவரே!
உசுரெல்லாம் அங்கிருக்கு
ஒடல்மட்டும் இங்கிருக்கு
எல்லை காக்கும் மச்சான் இந்த
முல்லையையும் காக்க கூடாதா?
கண்டவனோடு போராடும் மச்சானுனக்கு
தினம் கண்ணீரோட போராடும் எங்கண்ணு தெரியலியே?
ரயில் வருது, எழுத்து வருது ஆனா உன் மொவம் தெரியலியே
அந்த யோகம் எனக்கில்லையே
நெனப்பெல்லாம் உம்மேல
நெழாட்டம் ஆகிப்போனன்
தூக்கமெல்லாஞ் தொலச்சு
சாமி உம்மேல ஏக்கமாயிப் போனன்
தேசம் போன மச்சானே
ஏம் பாசம் புரியலியா
ஊக்கமா நாம வாழ வழியும் இல்லையா?

## ஜனவரி 6

புகழை சுமந்துகொண்டே சாக நீங்கள் தயார் என்றால் உங்கள் நினைவை சுமந்துகொண்டு வாழ நானும் தயார்தான்.

## ஜனவரி 24

பிறந்தவர்கள் இருக்கிறார்கள்
இருக்கிறவர்கள் இறக்கின்றார்கள்
வாழ்பவர்கள்தான் யாருமில்லையோ....

## ஜனவரி 29

நினைத்துப்பார்க்கும்படியான நிகழ்வுகள் ஏதும் நிகழவில்லையென இனி கதவுகள் திறந்து சுதந்திரமாகப் பறக்கலாம்... இனியாவது நிம்மதியாக இருக்கலாம்...

## பிப்ரவரி 11

இன்று நைட் டூர் கிளம்பினோம்.

## பிப்ரவரி 12

மதுரை மீனாட்சியம்மன் தரிசனம் காலை மணி 5.00

## பிப்ரவரி 13

கன்யாகுமரி. போட்டோ எடுத்தேன். நான் மகா, சுபா, தங்கவேலு, செல்வா. மகா, வானதிக்கு பேங்கில்ஸ் வாங்கிக்கொடுத்தது.

## பிப்ரவரி 14

இன்று காதலர் தினம். விசேஷமில்லை. நான் கொடுத்த கிளிப்ஸ், பேண்ட்ஸ், பேங்கில்ஸ் எல்லாம் வானதி வாங்கிப் போட்டுக்கிட்டது. தேங்க்ஸ் டு சுபா. நைட் சரியா 12 மணிக்கு பஸ்ஸில் லவ்வர்ஸ் டேக்கு பொண்ணுங்க எல்லாம் கேக் கொடுத்து கொண்டாடினோம்.

## பிப்ரவரி 15

இன்று காலையில் பவிதாவைப் பார்த்தேன். ஆனா பேச முடியலை.

## பிப்ரவரி 17

இன்று பிறந்தநாள். இருபது வயசு ஆனதே தெரியலை. பவி கிரீட்டிங்ஸ் + கொடிமரத்து வேர்கள் புக் கொடுத்தது. வானதி ரோஸ் + கிரீட்டிங்ஸ் கொடுத்தது. சுபாவும்... ரொம்ப சந்தோஷமாக இருந்தது. கணபதி மாமா டிரஸ் எடுத்து கொடுத்தாங்க. இன்னிக்கு காலையில பவியைப் பார்த்தேன். ஆனா பேசலை. மனசே கஷ்டமாயிருச்சு.

## பிப்ரவரி 18

இன்று எல்லா பொண்ணுகளும் சாரீ. இருந்தாலும் சுபாதான் 'பளிச்'. செல்வா டைரி ப்ரசென்ட் பண்ணினான். பிரேமா கிரீட்டிங் கொடுத்தாள்.(எதுக்கு அவன் கொடுத்தான்னு தெரியலையே...)

## பிப்ரவரி 19

இன்னிக்கு காலையிலேயே ஹெச்ஓடி செல்வாவையும், சுபாவையும் திட்டினான்.

மலர்க்கொடி பூரி கொடுத்தாங்க.

## பிப்ரவரி 20

லீவ். டைம் போகவேயில்லை. எல்லாம் இறைவா உன் செயல்.

## பிப்ரவரி 21

நல்ல நேரம். என்னிக்கு பிரச்சனை வருமோ தெரியலை. என் கடன் தீரவே மாட்டேங்குது. கவிதைப்போட்டி திங்கட்கிழமை.. முதல்பரிசு வாங்க இறைவா நீ அருள்வாய். பவி எப்படியிருக்குதோ?

## பிப்ரவரி 22

இன்று லீவ் போட்டுட்டேன். சும்மாதான். வானதிக்கு போன் பண்ண நினைச்சேன். ஆனா முடியலை. ச்சே! மிஸ் பண்ணிட்டேன். அதுகூட நல்லா பேசவே முடியலை. மனசே சரியில்லை.

## பிப்ரவரி 28

பூட்டி வைத்த கனவுகள். பவி லெட்டர் + தண்ணீர்தேசம். கவிதைப்போட்டியில் மூன்றாவது இடம். கொஞ்சம் வருத்தம்தான். கேசட் பாடல் பதிவு - வானதிக்காக.

## மார்ச் 1

காலேஜ் போனேன். இன்று இந்தியா - பாகிஸ்தான் மேட்ச். இந்தியா ஜெயிக்கும். பவிக்கு லெட்டர் எழுதினேன்.

## மார்ச் 3

சுபாவுக்கு மீரா எழுதிய கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் புத்தகம் கொடுத்தேன்.

## மார்ச் 4

க்ளாசில் மது வகுப்பில் பசங்க, பொண்ணுங்க எல்லோரும் பாட்டுக்குப் பாட்டு விளையாடினோம். ரொம்ப ஜாலியாக இருந்தது.

## மார்ச் 6

கரூர் போனேன். கலையரங்கம் தியேட்டரில் பத்ரி பார்த்தேன். கிக் பாக்ஸர் படம் பார்த்து பண்ணியிருப்பாங்க போல. பெருமாள் அண்ணன் கூட லன்ஞ். ஈவ்னிங் தங்கவேலு வீட்டுக்குப் போனேன். சுபாவுக்கு தங்கவேலு போன் பண்ணினான். என்னைப் பேசச்சொன்னான். நான் நல்லாவே பேசலை. என்னை எதுக்குப் பேசச்சொன்னான்? டான்ஸ் பண்றேன்னு சொல்லுச்சு. நத்திங் ஸ்பெஷல். நாளைக்கு காலேஜ் போறதா? வேண்டாமா? ஒரே டவுட். சனிக்கிழமை வேற ஃபேர்வெல் பார்ட்டி. பவி இந்தநேரம் என்ன பண்ணிக்கிட்டு இருக்கும்?

## மார்ச் 18

ஒவ்வொருத்தரும் எதிர்பாலினத்தவர்களை ஏதாவது ஒரு வகையில் கவர முயற்சி பண்ணறாங்க! சிலபேர் உடையில், பேச்சில், நகைச்சுவை, கலையார்வம், சாதுர்யம், கவிதை எழுதறது, கதை எழுதறது, ஸ்போர்ட்ஸ், அழகு, புத்திசாலித்தனம் ஏதாவது ஒண்ணு மூலமாக மத்தவங்களை கவர்ந்து அவர்களால புகழப்படணும். பூஜிக்கப்படணும்னு நினைக்கிறாங்க. இந்த ஆசை மட்டும் இல்லைனா வெற்றி மேலயும், ஜெயிக்கணும்கிற வெறியும் , சாதனை படைக்கும் ஆற்றலும் இல்லாம போயிருமோ? நானும் அப்படித்தானோ? என் மனசு திருப்திக்காகத்தான் ஏதாவது கிறுக்கறேன்.

## மார்ச் 24

சுபா கவிதை பேப்பர் கொடுத்தது. சிவராஜ் கவிதை பயங்கரமா ரொம்ப அழகா, சூப்பராக எழுதியிருந்தாங்க!

## மார்ச் 29

ஒரு மிகப்பெரும் கவிஞரை அடையாளம் காட்டியதுக்கு சுபாவுக்கு 1010 தேங்க்ஸ்.

## ஏப்ரல் 9

பவிதா தொலைபேசி செய்தது. மனம் விட்டுப் பேசி மகிழ்ச்சியாய் சிரித்து நாட்கள் ரொம்ப எட்ட போயிருச்சு. ஆறுதலாக இருந்தது. அன்பான மொழிகள் கேட்டதனால்! நான்தான் நிறைய பேசவில்லையோ?

பவி தன் கவிதை புக் ஒன்றினை என்னிடம் தந்தது. கட்டுரைப்போட்டியில் முதல் பரிசு. ஷீ ஈஸ் வெரி க்ரேட் ஆல்வேய்ஸ் மை விஷஸ் ஃபார் யூ.

## ஏப்ரல் 11

ஹால் டிக்கட் ரொம்ப கஷ்டப்பட்டு வாங்கினேன். செல்வா கூட சண்டை. நான் செஞ்சதுதான் தப்பு. பாவம் அவன் மனசை கஷ்டப்படுத்திட்டேன். ஸாரிடா மச்சான். பீர் சாப்பிட நினைத்தேன். சரி வேண்டாம்னு விட்டுட்டேன்.

## ஏப்ரல் 16

தங்கவேலு வீட்டுக்குப்போனேன். அப்பா வேலைக்கு கேட்கப் போனாங்க. வரச்சொல்லியிருக்காங்க. இங்கேயாவது நல்லபேர் எடுக்கணும். இறைவா அருள்வாய். வெள்ளிக்கிழமை மாரியம்மன் கோவிலுக்கு போகலாம்னு நினைத்துள்ளேன். பார்க்கலாம்.

## ஏப்ரல் 21

அக்கவுண்ட்ஸ் 50%. எளிதான தேர்வு. நிறைய தவறுகள் செய்தேன். அடுத்தமுறை மிகவும் கவனமாக தேர்வை எழுதவேண்டும்.

## ஏப்ரல் 23

வானதி அவங்க அப்பாவோடு ஃஎப்.எம் ல் பேசியதாம். கட்டுத்தாரை ஃபார்மேட் பழனி சொன்னான். அதைத்தான் பார்க்க முடியலை. அது குரலையாவது கேட்டிருக்கலாம். மிஸ் பண்ணிட்டேன்.

## மே 3

ஆத்தா கூட பேங்குக்குப் போய் பணம் போட்டோம். இன்னிக்காவது படிக்கணும்.

## மே 9

வானதி, சுபா, சுமதி பார்த்தேன். வானதிகிட்ட பேசலை. அவசரம். வருத்தம்தான் என்ன செய்ய? எவ்ளோ நாளைக்குப் பேசப்போறோம்? ஜஸ்ட் ஃப்யூ டேஸ். அப்புறம் அவங்கவங்க வழியில். என்னை யார் கண்டுக்கப் போறாங்க? நினைச்சுப்பார்த்தால் எல்லாமே வேஷம்தான். சீக்கிரம் கலைஞ்சிடுது. அப்புறம் வேற வேஷம். மறுபடியும் கலைப்பு.

## மே 17

பவி வீட்டுக்கு வந்துச்சு. ஒரே சந்தோஷம்தான். எதிர்பார்க்காமல் இன்ப அதிர்ச்சி. ஜாலியா பேசிட்டு இருந்தோம். ஞாயிறு 4 மணிக்குதான் வீட்டுக்கு போச்சு. போறப்ப அதுக்கு கோபம். என் மனசே சரியில்லை. நான் ஏதோ தப்பு

பண்ணீட்டேன் போல. சரியா தெரியலை. பவி பத்தி நினைச்சாவே பயமாக இருக்கு. அது மனச கஷ்டப்படுத்திட்டேன் இல்ல. அதனால்தான். அதுகிட்ட இனி எப்ப பேசுவேனோ தெரியலை.

## மே 23

தங்கவேலு மாமாகிட்ட போனோம்; சைன் வாங்க. பார்த்திபன் கனவு படம் பார்த்தேன். ஸ்ரீ & ஸ்னேகா - சூப்பர் மேட்ச்.

## மே 24

கறுப்பு தினம். சரவணன் அண்ணா அம்மா தவறிட்டாங்க. ரொம்ப கஷ்டமாக இருந்தது. உடம்பு சரியில்லை. பவிதா ரொம்ப அழுதிருக்கும்போல. அதனால்தான் நைட் அங்க போகலை. எனக்கு அழுகையே வரலை. மதியம் அண்ணன் வீட்டுக்கு போனேன். கண்ணன் மாமனார் கூட குமார், கிருஷ்ணன் கூட பேசிட்டு வீட்டுக்கு கூட்டி வந்தேன். பவி முகமே ஒரு மாதிரி இருந்துச்சு. பேசினேன்.

## ஜூன் 3

சாமி படம் நைட் ஷோ அபிராமி தியேட்டர். நானும் கண்ணனும் போனோம். நைட் வீட்டுக்கு போகும்போது மணி 3. சுவரேறி குதிச்சு வந்து தரையிலேயே படுத்துட்டேன். விக்ரம் சூப்பர் ஆக்டிங்.

## ஜூன் 4

வானதி ஞாபகமாகவே இருக்கு. பேசவும் முடியலை. அன்னிக்கு பார்த்து பேசாமலே வந்துட்டேன்.

## ஜூன் 9

இன்று வானதி பேசும்னு நினைச்சேன். பேசலை. இட்ஸ் ஓகே. அதுக்கு

ஏகப்பட்ட கமிட்மென்ட்ஸ். நாளைக்குப் பேசுமா?

## ஜூன் 14

பவி தண்ணீர் தேசம், உடைந்த நிலாக்கள் - பா.விஜய் கொடுத்தது. மழையை நனைத்தவன் புக் வாங்கினேன்.

## ஜூன் 16

வானதி பேசவே மாட்டேங்குது திரும்பக்கூட. ரிசல்ட் அது ஃபர்ஸ்ட் மார்க். நான் எப்பவும் போல ஆவரேஜ்தான். போதும் அதிகம் ஆசைப்பட்டால் நமக்கு நடக்காது. நம் ஃப்ரெண்ட் ஃபர்ஸ்ட் மார்க். ஸோ ஹேப்பி. இதுவரைக்கும் நான் அதுகிட்ட நேரடியா பாராட்டினதேயில்லை; ஒவ்வொருமுறை ஃபர்ஸ்ட் மார்க் வாங்கும்போதும். எப்பவும் நடக்கிற விஷயத்திற்கு எதுக்கு பாராட்டு? அது திருப்பி என் மார்க் கேட்டால்? ஐயோ! சிக்ஸ்த் செம் வரை அது ஃபர்ஸ்ட் மார்க் வாங்கணும்.

## ஜூன் 20

இன்னிக்கு வானதி லைட் ஸ்மைல் பண்ணுச்சு. என்னைப் பார்த்தா? தெரியலை. பாவம். அதுக்கு உடம்பு சரியில்லை.

## ஜூன் 21

தங்கவேலு காட்டில் கிணறுவெட்டி மண் அள்ளும் வேலை. கையெல்லாம் கொப்புளம். புண் ஆயிருச்சு. வேலை கஷ்டம்.

## ஜூன் 22

இன்றும் வேலை. மாலை 4 மணி ஆயிருச்சு வேலை முடிய. 100 ரூபா தருவான்னு நினைக்கிறேன். உடம்பெல்லாம் சரியான வலி. கையெல்லாம் புண்.

## ஜூன் 23

நோ ஸ்பீக். ஸ்போக்கன் இங்க்லீஷ் ராணி வந்தாங்க. தெனாவெட்டா பேசினேன்னு பசங்க சொன்னாங்க. தெரியலை. என் மனசுக்கு எது சரின்னு தோணுதோ அத பேசறேன். அவ்வளவுதான்.

## ஜூன் 24

என்னடா நம்ம லைஃப் இப்படியே போயிடுமா? கிட்டத்தட்ட ஒரு மாசம் இருபது நாள் ஆகப்போகுது. பேசவே மாட்டேங்குது. என்னவா இருக்கும். நாளைக்கு பேசுமா? வெய்ட்.

## ஜூன் 27

இன்னிக்கும் பேசலை. சுமதிகிட்ட 10 ரூ. வாங்கினேன். நாளைக்கு தங்கவேலு வேலைக்கு வரச்சொன்னான். போலாமா? வேண்டாமா? எனக்கு பிடித்த ரோஸ்கலர் ரவுண்ட் தோடு. வானதிகிட்ட நாளைக்கு போன் பண்ணி பேசிறலாம். இன்று ஸ்ரீராம் பிறந்தநாள். 'ரூ' க்கும் இன்னிக்குத்தான் பிறந்தநாள்.

## ஜூலை 10

இன்று காலை 11.30 அப்பாவுக்கு ஆக்சிடெண்ட். வாழ்க்கையில் ஏன் எனக்கு மட்டும் இவ்வளவு சோகமாகவும், கண்ணீராகவும் இருக்கு?. இன்னிக்கு யேசுராஜ், அருள், ராகேஷ் 1 இயர் சிவமூர்த்தி எல்லாம் திருப்பூர் போய் காதல் கொண்டேன் படம் பார்த்தோம். நான் இப்படி தப்பு பண்ணங்காட்டி இறைவன் அப்பாவுக்கு தண்டனை தந்துட்டார் போல!

## ஜூலை 11

இன்னிக்கு நைட்டும் காதல் கொண்டேன் படத்துக்குப் போனேன். நானும்

ரமேஷும். பிரமிக்க வைத்த படம். முதல் தடவையை விட இரண்டாவது தடவை பார்க்கும் போது ரொம்ப ரொம்ப நல்லா இருந்துச்சு. தேவதையைக் கண்டேன் சூப்பர் சாங். எல்லா பாட்டு வரியும் ரொம்ப நல்லா இருந்துது. ஆறுதல் தந்த படம். நைட் அம்மாயி வீட்டில் தூங்கினேன்.

## ஜூலை 17

கவி பிறந்த நாள். பெரிசா கிப்ட் கொடுக்கலை. ட்ரெஸ் எடுது தர நினைத்தாலும் பணம் கிடைக்கலை. மழையை நனைத்தவன் கொடுத்தேன். இந்த புக் நான் ப்ரசென்ட் பண்ணலைனாலும் பவி எனக்கு ப்ரசென்ட் பண்ணியிருக்கும். இதுதான் ஃப்ரெண்ட்ஷிப். இதுதான் ப்ரியம், சிநேகம், அன்பு இந்த மாதிரி நிறைய சொல்றாங்க. அதுதானோ! நிச்சயமா அதுதான்.

## ஆகஸ்ட் 2

பவி வீட்டுக்கு வந்து அப்பாவை பார்த்தது. லைப்ரரி போனேன். பாலகுமாரன் புக் எடுத்தேன். இவ்ளோ நாள் நான் வேஸ்ட் பண்ணிட்டேன். ரொம்ப பெரிய ஜீனியஸ். 1. இனியெல்லாம் சுகமே 2. அகல்யா & செவ்வரளி 3. பணம் காய்ச்சி மரம்

## ஆகஸ்ட் 3

நோம்பி இன்னிக்கு. கோயிலுக்கு போகலை. குளிக்கவுமில்லை. ஏண்டா சுந்தர் இப்படியிருக்கற? எப்படி உருப்படப்போற?

## ஆகஸ்ட் 5

அறச்சலூர் சரண்யா ப்ரெண்ட்ஷிப் பேண்ட் கொடுத்துவிட்டது. வானதி லெட்டர் கொடுத்தது. முருகு சித்தப்பாவுக்கும், அப்பாவுக்கும் ஏதோ பிரச்சனை? ரொம்ப கோபமாக பேசிக்கிட்டிருந்தாங்க. பவி வயலட் கலர் சாரீ. சூப்பர்.

## ஆகஸ்ட் 6

இன்னிக்கு ரவி வண்டி எடுத்துக்கிட்டு முத்தூர் கொண்டு போனேன். ஸ்ரீராமைப் பார்த்து பேசினேன். இன்னிக்கு க்ளாசில் அதிகம் பேசி சந்தோஷமாக இருந்தேன். சாயந்திரம் மறுபடி ஸ்ரீராம் வீடு. அம்மாகிட்ட பேசுனது ஆறுதலாக இருந்தது. நாளைக்கு மறக்காம டேக்ஸ் படிக்கணும். ஆதித்ய ஹிருதயம் சொல்லணும். கோயிலுக்குப் போய் குருவுக்கு அர்ச்சனை பண்ணனும். ஸ்ரீராம் அம்மா சொன்னபடி நடக்கணும்.

## ஆகஸ்ட் 11

ஒரே குஷி! மூர்த்தி யமஹா கொண்டுவந்தான். ஒரே சர்புர் தான். ஜாலியா இருந்துச்சு.

## ஆகஸ்ட் 16

வானதிக்கு ஒரு லெட்டர் போட்டேன். அது கூட பழகி மூணு வருஷம் ஆகப்போகுது. ஒரு லெட்டர் கூட போடலை. ஸோ, ஒரு லெட்டர் போஸ்ட் பண்ணிட்டேன்.

## ஆகஸ்ட் 18

இன்னிக்கு சந்தோஷமாக குஷியாக இருக்கிறமாதிரி காலையில் காலேஜ் வந்த வுடனே வானதி சொல்லியது நான் ஊருக்கு வர்றேன்னு!. நானும் வானதியும் முத்தூர் போனோம். பெரிம்மா ஏதாவது பேசிட்டாங்கன்னா? என்ன பண்றதுன்னு நான் வீட்டுக்கு போகலை. முன்ன மாதிரி பெரிம்மா இல்லை. நல்லாபேச மாட்டேங்கிறாங்க. நான் கூடப்போறதுனால வானதியை தப்பா நினைச்சுட்டா? அதனாலதான் போகலை. கஷ்டமாகத்தான் இருந்தது. பவி வேற திட்டுச்சு. இன்னோர் நாள் போனாப்போகுது. பவி, வானதி இருவரும் நின்னுட்டே பஸ்ல வந்த தால எனக்கு கால் வலிச்சுது.

## ஆகஸ்ட் 20

இன்று மாதேஸ் வகுப்பில் கதை - விஸ்வாமித்திரர். அவரையே ஓட்டினோம். ஃபர்ஸ்ட இயர்ல இருந்தமாதிரி நானும், வானதியும் ஆயிட்டமாதிரி ஃபீல் பண்றேன். வானதி இன்னிக்கு பைபை சொல்லுச்சு.. கண்களில்தான். இப்படியே இருந்துர்லாம்.

## செப்டம்பர் 2

அப்பா மறுபடியும் ஹாஸ்பிடலில் சேர்த்தோம். ஆபரேஷன் பண்ணனுமாம். ஒரு வாரம் பெட்டில் இருக்கணுமாம்.

## செப்டம்பர் 3

காலேஜ் போகலை. சிவராஜ் கடிதம் பார்த்ததும் ரொம்ப சந்தோஷமாக இருந்தது.
ஜன்னல் வானாய்
திறக்க..
நீ.. விரிகிறாய்
சூரிய தட்டாய்
விழிகளில் .. வேர் விடும்
நாளைய விருட்சங்கள்
உன்னால்
போராடு..
-சிவராஜ்
(கடித கவிதை)

## செப்டம்பர் 12

கோவை கற்பகம் காலேஜ். சூப்பர் காலேஜ். நைட் நானும் சூர்யாவும்

அப்பாவை ஹாஸ்பிடல்ல போய் பார்த்தோம். கறுப்புக்கயிறு வாங்கினோம். பிரியாணி. ஈச்சநாரி அம்மன் கோயில் போனோம். மனசுக்கு அமைதியாக இருந்தது. கோவை நல்ல ஊர்.

## செப்டம்பர் 17

பவி லெட்டர் கொடுத்தது. நட்புக்காலம் - அறிவுமதி. எப்படி இப்படித்தோணுது? நிறைய புக் படிச்சு அறிவை வளர்த்திக்கிட்டாதான் சாத்தியமேனு நினைக்கிறேன். விசாலமாக்கு உன்னை! விஸ்வரூபம் ஆவாய்.

## செப்டம்பர் 19

செல்வன் பிறந்தநாள். இன்னிக்கு காலையிலேயே ஒரு சின்ன விளையாட்டு டம்ளர் கவுத்தி வெச்சு. பாவம் வானதி ஏமாந்திருச்சு. ஜாலியா இருந்துச்சு.

## செப்டம்பர் 20

எல்லோரும் புடவை. வானதி ஸ்கை ப்ளூ. புடவை கட்டினா எதுக்கு கையில வளையல் கழுத்தில செயின்னு நகைக்கடை மாதிரி... சிம்பிளா செயின் சிறுசா வளையல் சூப்பராக இருந்திருக்குமே. சாயங்காலம் ஏதோ பேச வந்தது மாதிரி இருந்தது. ஏண்டா சுந்தர் போன் பண்ண மாட்டேங்கிற? தெரியலை. நாளைக்கு தொலைபேசி பண்ணலாமா?... டீக்கடை 4.00 கொடுக்கணும். அப்பா நலமாயிருந்தா அவரே கொடுத்திடுவாங்க. இப்ப நான்தான் கொண்டுபோய் தரணும்.

## அக்டோபர் 23

பறப்பது தவிர்த்து பிற நேரங்களில்
இறக்கைகள் சுமக்குமோ?
வெள்ளைப்புடவைகளை
வெளுப்பது யாரோ?
கனவில் வந்த தேவதை

பற்றி பகலில் யோசித்தது....

## அக்டோபர் 24

மௌனத்தில் நீ
மயக்கத்தில் நான்.
குழப்பத்தில் காதல்....

## அக்டோபர் 25

பிதாமகன்.. உணர்ச்சிக்குவியல். பாதித்துப் போனேன். இளங்காத்து வீசுதே...

## அக்டோபர் 29

ஹால் டிக்கெட். இன்னிக்கு வானதியை பார்த்துக்கிட்டே இருந்தேன். வானதி கூடவே போகணும்னு தோணுச்சு. மகிழ்ச்சி....

## அக்டோபர் 31

கௌரி லெட்டர். இலக்கியப்பட்டறைக்கு போகமுடியாது. அதே தேதியில் தேர்வு. சிவராஜ் அவர்களுக்கு கடிதம்.

## நவம்பர் 1

பெய்த மழையை விட
பெய்யும் மழையை விட
இனி பெய்யப்போகும் மழை
பற்றிய ஏக்கங்களும்
கனவுகளும் எனக்கு அதிகம்
வருவதுண்டு...
பேசி முடிந்த கணங்களைவிட

பேசிக்கொண்டிருக்கும்
நிமிடங்களைவிட
இனி பேசப்போகும்
நிமிடங்களில் நிகழும்
உணர்வுகளின் ஒத்திகை
என் மனதினுள்...

## நவம்பர் 4

அக்கவுண்ட்ஸில் 70%. மகிழ்ச்சி. காடேஸ்வரி அப்பாம்மாவுக்கு ஆக்சிடெண்ட். கவலையாகிவிட்டது மனது. மதியம் காங்கயம் ஹாஸ்பிடல் போய் அவங்க அப்பாவை பார்த்தேன். நான் அருள், ராகேஷ்.

## நவம்பர் 20

அறச்சலூர் சிவராஜ், நானும் சூர்யா என நாகமலை போய் நிறைய பேசினோம். அவனுக்கு முதல்பரிசு. மிகவும் சந்தோஷம். அடையாளம் கதை சொன்னான். குறும்படம் செய்யணும். கனவுகள் நடக்கணும்.

## நவம்பர் 24

மீண்டும் அறச்சலூர் சிவராஜை பார்க்க முடியவில்லை. நானும் சூர்யாவும் நல்லா சுத்தினோம். அரவிந்தர் ஆசிரமம் போனோம். அமைதியான இடம். சூர்யா வீட்டில் சாப்பாடு. நைட் எட்டுமணி வீட்டுக்கு வந்துசேரும்போது. குமாரசாமி வீடு போனோம்.

## நவம்பர் 25

ஈரோடு செக் வாங்க கோர்ட் போனேன். 4000 ரூபாய். தீராநதி கிடைக்கலை. காலேஜ் போவது பற்றிய நினைப்பு சலிப்பு. இந்த நான்காவது எஸ்டேட்டில் நல்ல விளைச்சல்...

## நவம்பர் 29

கல்லூரிநாளின் காலையிலிருந்தே மழைத்தூறல். அமர்ந்திருந்த இடத்திலிருந்து பார்த்தேன். ஜன்னல் வழியாக ஒவ்வொரு துளியும் எப்படி முத்து மாதிரி ஆகுதுன்னு. முத்து மாதிரி இல்ல சில்வர் உருண்டை மாதிரி. இலைகளில் சுமை தாங்காமல் கீழே விழுந்து விடுகிறது. மறுபடியும் துளித்துளியாய் சேர்கிறது. அற்புதம்.

## நவம்பர் 30

பவிக்கு கடிதம்...

**பவி எழுதியது.**

## டிசம்பர் 2

மெல்லியதாய் மேனி தடவி
சிலிர்க்க வைக்கும் மலைக்காற்று
பனிப்பாறைகளுக்குள் உருகி
வழிந்தோடும் நீர்த்துளி
கற்பாறைகளுக்குள்ளும் பூத்து சிரிக்கும் சின்ன மலர்கள்
ரயில் பயணத்தில் தலைகோதி
தூங்க வைக்கும் ஜன்னல் காற்று
உச்சி வெயில் தகிக்கும்போது
நிழல் விரிக்கும்
குளிர் நடுக்கும் கடற்கரையில்
போர்வையாகும் கரம்
இவைதானே நீ
வா .. உனக்காகத்தான் காத்திருந்தேன்.

## டிசம்பர் 4

இன்று உற்சாகமாய் தொடங்கியது எனது காலைப்பொழுது. நீ படித்த பள்ளிக்கு செல்கிறேன் என்பது மனசுக்கு சந்தோஷமாய், இதமாய் இருந்தது. நீ +2 படித்த அறை, நீ அமர்ந்த இருக்கை எல்லாம் தோழி சொன்னாள். ஒரே சந்தோஷம்தான். நிறைய மிஸ் பண்ணிவிட்டேனோ அப்படின்னு தோணியது. தம்பியைப் பார்த்தேன். அவனைப் பார்த்து ரொம்ப நாளாகிவிட்டது. அவனிடம் கொஞ்சம் மாற்றம் தெரிந்தது. மீண்டும் பள்ளிக்குச் சென்று படிக்கலாமா என்று ஆசை. நடக்காத ஒன்றுக்குத்தான் எப்போதும் மனம் ஆசைப்படுகிறது. உன்னால் இன்று சந்தோஷமாய் கழிந்தது. கடவுளுக்கு நன்றி.

## டிசம்பர் 13

மார்னிங் சிக்ஸோ கிளாக் பிளாக் தண்டர் கிளம்பினோம். போறதுக்கு இஷ்டமேயில்லை. கேன்சல் ஆயிடணும்னு தோணுச்சு. ப்ரெண்ட்ஸ் கம்பல் பண்ணினதால கிளம்பினேன். ரொம்ப ரொம்ப மனசு கஷ்டமா இருந்துச்சு. கேம்ஸ் விளையாட ஆரம்பிச்சதுக்கப்பறம் சந்தோஷமா இருந்தேன். அசோக்கிற்கு போன் பண்ணினேன். மனசே கேட்கலை. கமெண்ட் அடிச்சாங்க. Macy Mine ரொம்ப த்ரில்லிங்கா இருந்தது. Wait and Luck பார்த்தேன். கண்ணன் ஹோட்டலில் டின்னர். சக்தி காம்ப்ளெக்ஸில் ஷாப்பிங். அழகான டால் ஒன்று வாங்கினேன் வொய்ட் வித் ரெட்.

## டிசம்பர் 15

காலேஜுக்கு லீவ். இன்னிக்கு யோசிச்சு ஒரு முடிவுக்கு வரணும்னு நினைச்சேன். பட் முடியலை. என்ன பண்றது? பவி நீ ஏன் இப்படி இருக்கறே? சேஞ்ச் யுவர்செல்ப். டோன்ட் பீ கன்ஃப்யூஸ்டு.

## டிசம்பர் 16

ஷர்மிக்கும் எனக்கும் இடையே இடைவெளி வந்துட்ட மாதிரி ஃபீலிங். எதுவுமே பேசலை. அழுகையா வந்தது. ஏன் எனக்கு மட்டும் இப்படியெல்லாம் நடக்குது?

## டிசம்பர் 17

ப்ராக்டிகல். ஷர்மி மாமாவை அறச்சலூரில் பார்த்து பேசியதாக சொன்னாள். வீட்டில் அப்பாவைத்தவிர எல்லோரும் ஓகே சொல்லிவிட்டதாக சொன்னாங்களாம். சந்தோஷம் ஒரு பக்கம். ஏன் இப்படி டார்ச்சர் பண்ற? மைண்ட் ஒழுங்காவே இல்ல. சுந்தருக்கு கடிதம் எழுதினேன்.

## டிசம்பர் 19

கவிதைகள் படிச்சுட்டு ப்ரெண்ட்ஸ் என்னிடம் நிறைய கேட்டாங்க. அப்படியெல்லாம் இருக்காது. வீட்டுக்குப் போகணும்னு நினைச்சேன். ஆனா போக முடியல. தாங்கிக்கவே முடியல. எல்லாம் நன்மைக்கே பவி. மனசுக்கு ஏதோ பாரமா தோணுச்சு. இன்னிக்கு காலையிலிருந்தே எதுவுமே ஒழுங்கா நடக்கல.

## டிசம்பர் 27

மாமாவுடன் கோயிலுக்குப்போனேன். எப்படி இவ்வளவு தைரியம் எனக்குள். நான் பேசணும்னு சொன்னதும் கோயிலுக்குப் போகலாம் என்று சொன்னதில் சந்தோஷமாக இருந்துச்சு. ஃப்ரீ ஆ என்னால் பேச முடியலை. அழுதாங்களான்னு தெரியல. மனசில இருந்ததை சொல்லிட்டேன்.



# கடிதங்கள்

## 1

*குழந்தை பிறக்கும்போது தாயின் வேதனை யாருக்குத் தெரியும்*
*ஆனால் குழந்தையின் வேதனை*
*யாருக்குத்தெரியும் இந்த உண்மை*
*தாயுக்கும் குழந்தைக்குமான உறவை பலப்படுத்தவே!*
*வேதனைகளை பகிர்ந்து கொள்ளவே*
*நீயும் உன் தாயின் வேதனையறிந்து*
*நடந்து கொள்வாய் என நினைக்கிறேன்.*
*ஒவ்வொரு விடியலும் உலகுக்காக மட்டுமல்ல*
*உனக்காகவும்தான்*
*விடிவெள்ளியைத் தேர்ந்தெடுப்பது உன்*
*கையில் மட்டுமே*
*தேடி விட்டாயா? இனி அதை மற்றவர்களுடையதை விட நீ ஒளிரச்செய்யவேண்டும்*
*என்ற அன்புக்கட்டளையுடனும்*
*பிறந்தநாள் வாழ்த்துக்களுடனும்*

*தோழி*
*வானதி*

(அடுத்தவருடம் அதைத்தொடர்ந்தும் என் வாழ்த்துகள் உன் கையில் சரியாக வந்தடைய வேண்டும் என இவ்விடியலை வேண்டிக்கொள்கிறேன்)

எனக்குள் இருக்கும் சில ரசனைக்கு
கவிதை என்று பெயரிட்டு
என்னை வளரச்செய்திருக்கிறாய்

அந்த வளர்ச்சிக்கு
சொந்தக்காரன் நீ மட்டும்தான்
எப்போதும் என் கவிதைகள்
உனக்கே சமர்ப்பணம்
உன்னிடம் வியந்தவைகளில் ஒன்று
கவிதை
அதனால்தானோ நானும்
ஆசைகொண்டேன் அதில்.
அதற்காக நன்றியை மட்டும் கூறி விட்டு விலகிக்கொள்ள மாட்டேன்.

## 2

ஹாய்,

சுந்தர். ரொம்ப சந்தோஷமா இருக்கு. நீ என்னை புரிஞ்சுக்கிட்டதுக்கு தேங்க்ஸ் அண்ட் ஆல்ஸோ தேங்க் காட். இளையராஜா வரிகள் உண்மையா? நிஜமாகவே என்னை அப்படித்தான் ட்ரீட் பண்றியா? ம்.

கோவில் சாங் கேட்டிருக்கேன். நல்லாருக்கு. ஆமா நம்ம க்ளாஸ் பசங்களா கமெண்ட்ஸ் அடிக்கிறாங்க? அப்படி அடிக்கிறவங்க உன் க்ளோஸ் ப்ரெண்ட்ஸா இருந்தா அவனுக்கு புரியவை. இல்லைனா விட்டுரு. சரியா?

அப்புறம் இன்னொரு மேட்டர் எனக்கு தெரிந்தவரைக்கும் ஐஏஎஸ் ரொம்ப கஷ்டம். அதுக்கு முதல்ல இருந்து ப்ராக்டிஸ் பண்ணனும். நீ பண்ணிருக்கியா?

நம்ம ஹெச்ஓடி ரொம்ப நாளா முயற்சி பண்றாரு. பட் முடியலைன்னு சொல்லியிருக்காரு. அதனாலதா சொல்றேன். உன்னை வேண்டாம்னு சொல்லலை. நாம் ஒண்ணுல இறங்கறம்னா அதப்பத்தி முதல்ல தெரிஞ்சிக்கிட்டு அது நம்மால முடியுமான்னு யோசிக்கணும். அப்பத்தான் வின் பண்ணமுடியும். சொல்லறது புரியுதா?

என்னைப் பொறுத்தவரைக்கும் நாம் எதிலையும் தோற்கக்கூடாது. அப்படியில்லைனா கலந்துக்கவே கூடாது. ஆனா நீ எப்படி நினைக்கறீன்னு தெரியலை. பட் முயற்சி பண்றனுட்டு டைம் வேஸ்ட் பண்ணக்கூடாது. உலகத்துல டைம் இம்பார்ட்டன்ஸ் தெரியாதவன் பொழைக்கமுடியாது. முன்னேறவும் முடியாது. சொல்றது புரியும்னு நினைக்கிறேன்.

எதுவாக இருந்தாலும் பலதடவை யோசிச்சு பண்ணு. நமக்குன்னு ஏதாவது பிட் பண்ணி சைடுல இதை பண்ணு எதுக்குமே ப்ளானிங் அவசியம். நா இப்போ டேலி போறேன். நா பி.காம் முடிச்சவுடனே இதுவும் கம்ப்ளீட் ஆயிரும். நா வெளில வர்றப்ப அப் டு 60% கொண்டு வந்துருவேன். அப்புறம் நாம படிப்பு முடிச்சவுடனே ஜாப் ஏற்பாடு பண்ணிட்டேன். ஸ்டார்டிங் சேலரி 3000 ரூபாய். நம்ம ரெஸ்பான்ஸ் பொறுத்து எக்ஸ்டண்ட் ஆகும். அப்படியே சைடுல எம்பிஏ. அதுவும் என் பணத்துல. வீட்டுக்கும் கொடுக்கலாம். நானும் சேவ் பண்ணலாம்.

இதுதா என்னோட ப்ளான். எப்படி இருக்கு? எனக்கு வேர்ல்ட்ல நிறைய தெரிஞ்சிக்கணும்னு ஆசை. அதுக்கு ஸ்டடி முக்கியம். நா நிறைய டிகிரி வாங்கணும். மினிமம் 3. அப்புறம் நீ முதல்ல நல்லா படி. நாம் நல்லா இருந்தா பத்து பேர் நம்மளை தேடி வருவாங்க. டைம் வேஸ்ட் பண்ணாதே. லைஃப்ல தெரிஞ்சிக்க வேண்டியது நிறைய இருக்கு. அதுக்கு ஸ்டடி ஹெல்ப் பண்ணும்.

யாரையும் பத்தி கவலைப்படாதே. நீ ஃபர்ஸ்ட் டெவலப் ஆகு. அப்புறம் எல்லாம் தானா தானே வரும்.

ஏய்! எனக்கு க்ளோஸ் அப் அட்வர்டைஸ்மென்ட் எனக்கு பிடிக்கும். அப்புறம் இன்சூரன்ஸ் விளம்பரமும் அப்படித்தான். அக்கறை காட்டாமல் இருப்பது சுலபம், ஆனால் அக்கறை காட்டுவது அதைவிட சுலபம். அதுல ஒவ்வொரு சீன் மீனிங்கோட கொடுத்திருப்பான். எனக்கு அது புடிக்கும். அடிக்கடி பாடுவேன்.

எப்பவும் சினிமா பாத்துக்கிட்டே இருக்காதே. பாட்டையும்தான். படிடா. ப்ளீஸ் நானே இப்பத்தா புரிஞ்சிக்கிட்டேன். நீ மிஸ் பண்ணிறாதே. நாம் எல்லாத்திலையும் க்வாலிட்டியா இருக்கணும். சரியா. இட்ஸ் மை ஸ்மால் அட்வைஸ் டு யூ.

சரி, பை. வில் பீ மீட் இன் நெக்ஸ்ட் லெட்டர்.

யுவர் வெல்விஷர்
சுபா

என்னோட க்ளாஸ்மேட் தங்கா அவகிட்ட நா எல்லாத்தையுமே ஷேர் பண்ணுவேன். நா ஃபர்ஸ்ட் பிரிபஃரென்ஸ் கொடுக்கிற ஆளு அவதா. உன்னை கேட்டா ன்னு சொல்லச்சொன்னா. ஸோ நெக்ஸ்ட் லெட்டரை அவளை எழுதச்சொல்றேன்.

லெட்டரை வீசாதே! ஊரே பாக்குது. கையில கொடு. இல்லை நோட்டில் வெச்சுக்கொடு. நா ஏன் சொல்றன்னா நாம ஏன் அடுத்தவங்க வாயில உழணும். விலகிரலாம். ஓகே.

# 3

ஹாய்

தேங்க்ஸ் ஃபார் யுவர் ரெஸ்பான்ஸ். என்னைப் பொறுத்தவரைக்கும் குறைகளை சொல்றவங்களே உண்மையான ப்ரெண்ட்ஸ். எனக்கு இன்னமும் உம்மேல ரைட்ஸ் எடுத்துக்கறக்கு பயமாக இருக்கு.

இன்னொரு விஷயம் முதல்ல இருந்ததைவிட இப்பத்தா நாம க்ளோஸ் ஆகப்போறம்னு நினைக்கிறேன்.

நீ என்னைப் பத்தி எழுதின ரீசன்ஸ் பரவாயில்லை. நீ அப்படி எழுதினதுக்கு காரணம் என்னைப் பத்தி உனக்கு முழுசா தெரியாது. அதனால் உன்னைத் தப்பு சொல்ல முடியாது.

நா யாரையும் தப்பு சொல்ல விரும்பல. என்னைப் பொறுத்தவரைக்கும் எல்லோருமே நல்லவங்க. ஆனால சம்டைம்ஸ் சம் பர்சன்கிட்ட டிஃபரண்டா நடந்துக்கிறாங்க. அவ்வளவுதா. அப்புறம் நா இந்த காலேஜ் சேர்ரப்போ எனக்கு அவ்வளவு மெச்சூரிட்டி கிடையாது. பட் இப்போ அப்படிக் கிடையாது. யார், எப்படி, எப்படி பழகணும்னு தெரியாது . என்னை பொறுத்தவரைக்கும் எல்லோருமே சந்தோஷமா கஷ்டப்படாம இருக்கணும். அவ்வளவுதான். ஆனா, ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு மாதிரி டைப், அவுங்களை புரிஞ்சு நடக்கணும்னு தெரியலை.

ஏண்டா என்னை யாருக்கும் தெரியாம இருந்தா நா எவ்வளவு தப்பு பண்ணுனாலும் தெரியாது. ஆனால எல்லாருக்கும் தெரிஞ்சாவே இந்த சொசைட்டிய பொறுத்தவரைக்கும் தப்பு. இதை நான் உனக்கு சொல்ல வேண்டியதில்லை. பரவாயில்லை. நா என்னைப்பத்தி நா நல்லவ எனக்கு ஒண்ணும் தெரியாது அப்படீன்னு சொல்லலை. என்னைப் பத்தி தெரிஞ்சவங்க நிச்சயமா என்னை தப்பா நினைக்க மாட்டாங்க.

வானதி மேட்டர்ல நா அட்வைஸ் பண்ணுனது உனக்கு மட்டும்தான். உன்னைப்பத்தி தப்பாவோ வேண்டாம்னோ நா சொல்லலை. அப்படி நா நினைச்சா உன்கிட்ட நீ நினைக்கிறது தப்புன்னு எழுதுவனா(ஃபர்ஸ்ட்)

*பரவாயில்லை. உனக்கு எதுவும் முழுசா தெரியலை. அப்புறம் உன்னை பத்தோட பதினொன்னா நா எப்பவுமே நினைக்கலை புரியுதா. நா யாரையும் அப்படி ட்ரீட் பண்ணலை பட் நீ என்னை தப்பா மீன் பண்ணியிருக்கே.*

*அப்புறம் நம்ம க்ளாஸ் பசங்களை பத்தி எழுதியிருந்தே. யாரையும் தப்பா நினைக்காதே. அவங்க இன்னும் சின்ன பசங்க. அவங்களுக்கு லைஃப் னா என்ன? ப்ரெண்ட்ஸ்னா என்னன்னு தெரியலை. பரவாயில்லை. மன்னிச்சு விட்டுரு. புரியுதா.*

*நா ஒண்ணும் நல்லா இருக்கிறவனோட பேச மட்டும் பேசணும்னு நினைக்கிறதில்லை. நா ஜெகதீஸ் கூட பேசறதுக்கு என்ன காரணம்? எனக்கு ரெஸ்பான்ஸ் பண்ணுனா நா டெபனிட்டா ஆ பண்ணுவேன்.*

*ம். நா யாருகூடையும் அவ்வளவா பேசறது இல்லை. பிகாஸ் எனக்கு அதுல இன்ட்ரஸ்ட் இல்லை. ஏன்னா, நா +2 வரைக்கும் கேர்ள்ஸ் க்ளாஸ்தான். ஸோ, பாய்ஸ் எப்படி ட்ரீட் பண்றதுன்னு தெரியலை. ஸோ, கிரியேட்டிங் பேட் நேம் டு மீ. பட் இதிலிருந்து எனக்கு நிறையா எக்ஸ்ப்ரீயன்ஸ் கிடைச்சிருக்கு. நீ பார்த்த சுபா ஒன்லி ஃபார் ஃபர்ஸ்ட் இயர் நாட் டு பீ நவ். ஓகே.*

*நா இப்போ மெடிடேஷன் க்ளாஸ் போறேன். எனக்கு ரொம்ப புடிச்சிருக்கு. அப்புறம் நீ மனசே ரிலாக்ஸ் ப்ளீஸ், மனசே ஒரு மந்திரச்சாவி புக் படிச்சிருக்கியா, அதிலிருந்துதான் நா சேஞ்ச் ஆனேன்.*

*நா எனக்கு புடிச்ச எல்லாருகிட்டேயும் சொல்றது டைம் கிடைச்சா மெடிடேஷன் க்ளாஸ் போ அப்படினுதான். நீயும் முயற்சி பண்ணு. நிச்சயமா கொஞ்ச நாள்ல எனக்கு தேங்கஸ் பண்ணுவ.*

*அப்புறம் ஏண்டா கழுதை! உன்னை விட குட்டையா இருந்தா. உடனே பழக மாட்டியா? என்னதிது சின்னப்புள்ளைத்தனமா? ம்.*

*என்னைப் பத்தி நீ தெரியும்னுனா ஒரு எக்ஸாம்பிள். சசி எனக்காக இப்பவும் என்னவேணும்னாலும் செய்வான்- ஏ நீ நினைக்கிற மாதிரி அவனும் நினைச்சிருந்தா அவனுக்கு கொஞ்சமாவது அறிவு இருக்குன்னு நினைக்கிறியா, அப்படின்னா அவ என்னை மதிக்கிறதுக்கும் ஒரு ரீசன் இருக்கும்.*

*அப்புறம் எனக்கு முத்துசெல்வி மாதிரி யாரும் அண்டர்ஸ்டேண்டிங் இல்லை.*

*எனக்கு என்ன தெரியுமா? எப்பவுமே*

*1. எனக்கு ரெஸ்பான்ஸ் பண்ணுனா, நா டெபனிட்டா ரெஸ்பான்ஸ் பண்ணுவேன் இன் எனிபடி.*

*2. என்னை அண்டர்ஸ்டேண்டிங் பண்ணிக்கணும்.*

*3. எனக்காக எதையும் விட்டுக்கொடுக்கணும்.*

*4. முக்கியமா எனக்கு உண்மையா நடக்கணும்.*

*இப்படி யார் செஞ்சாலும் அதுக்காக நா என்ன வேணும்னாலும் செய்வேன். இரண்டு மடங்கு.*

*நா என்னைப்பத்தி ஓவரா எழுதிட்டேன்னு நினைக்கிறேன். இதை நம்பறதும், நம்பாததும் உன் இஷ்டம் சரியா. நீ என்னை ப்ரெண்டா அக்செப்ட் பண்ணுவியா? இல்லை விட்டுடுவியா? தெரியலை.*

*பட் ரொம்ப தேங்க்ஸ். இவ்வளவு ஓபனா, ரீசன்ஸ் சொன்னதுக்கு. அதுவே போதும். ஒண்ணு சொல்லட்டுமா, நண்பர்களை பத்தி பேசும்போது நிறையா பேசு. எதிரிகளை பத்தி பேசும்போது அதுவுமே பேசாதே!*

*நா எழுதினதுல நீ ஏதாவது தப்பா ஃபீல் பண்ணுனா லெட்டர் எழுது. ப்ரீயா இருந்தா எழுதேன்.*

*எனக்கு தெரிஞ்ச வரைக்கும் உண்மையான ப்ரெண்ட்ஸ் ஆக யாரும் பழகிறதில்லை. குறிப்பாக பாய்ஸ். பட் நீ அப்படி இருக்க மாட்டேன்னுதா உன்கிட்ட கொஞ்சறேன். ஓகே வா எருமை, கழுதை பன்னி... போதுமா? சரி திஸ் ஈஸ் டூ மச் . ஓகே பை*

*உனது*
*சுபா*

## 4

*ஹாய்,*

*எருமை அண்ட் ஆல்ஸோ கழுதை!!!*

*தேங்க்ஸ் ஃபார் யுவர் லெட்டர் அண்ட் ரெஸ்பான்ஸ். உண்மையைச் சொன்னா நா நினைக்கிற மாதிரிதான் நீயும் நினைக்கிற. தேங்க் காட். என்னை அண்டர்ஸ்டேண்ட் பண்ணிக்கிட்டதுக்கு தேங்க்ஸ்.*

*நா மெடிடேஷன் ஒன் இயரா போறேன். துரியம். நா புக்ஸ் ரொம்ப படிப்பேன். நா சொன்ன அந்த மாதிரி புக்தான் முக்கியமா. என்கிட்ட (ம.ரி.ப்) புக் இருக்கு. அதை டெய்லி படிப்பேன். உனக்கு நெக்ஸ்ட் வீக் தர்றேன். நீ (ம.நீ ஒ. ம.சா) புக் இருந்தா குடு. படிக்கணும் போல இருக்குது. பிதாமகன் ப்ரெண்ட்ஷிப் சூப்பர் என்னைப்பொறுத்தவரைக்கும் எல்லா ரிலேசன்ஷிப்பும் அதுமாரி லவ் இருக்கணும். அதுதான் ட்ரூ அன்பு.*

*நீ ஒரு சின்ன வட்டத்திலேயே இருக்கேன்னு நினைக்கிறேன். ஃபில்ம் எல்லாம் நம்மலை ஃபூல் ஆக்கிரும். முக்கியமா தமிழ் சினிமா. இது நான் நினைப்பதுதான். புக் ஓகே. ப்ரெண்ட்ஸ் என்னைப் பொறுத்தவரைக்கும் எதிர்பார்த்துதான் எல்லோருமே பழகறாங்க. பேரன்ட்ஸ் இன்குலீடிங். எதிர்பார்க்காம பழகுறவங்க ரொம்ப.. ரொம்ப கஷ்டம். எல்லோருமே ஜஸ்ட் .. இது 100% உண்மை. பாத்து பழகு.*

*இப்ப இருக்கிற அனுபவத்துல நிச்சயமா என்னோட ஃபியூச்சர நா நல்லா பாத்துக்குவேன். ஆனா நீ என்னடான்னா ப்ளான் இல்லைங்கறே. ஒண்ணு தெரிஞ்சுக்கோ எதுவுமே ப்ளான் இல்லாம பண்ணுனா அது ஃபுல் சக்சஸ் ஆகாது. எதுவுமே ஒரு ஐடியா இருக்கணும். ஆனா நாம எதை எதிர்பார்க்கிறோமோ ரொம்ம அது நடக்காதுங்கிறது வேறு விஷயம். பட் ப்ளான் கண்டிப்பா வேணும்.*

*புரியுதா? நீ நல்லதே நினை. நல்லதே நடக்கும். ஆனால் ஏமாளி ஆகிடாதே. நா ஒரு ப்ளான்ல இருக்கேன். அது ஓகே ஆயிருச்சுன்னா கண்டிப்பா நா உனக்கு ஹெல்ப் பண்ணுவேன்(ஃபியூச்சர்) அதை சக்சஸ் பண்ணிட்டு உன்னை கான்டாக்ட் பண்றேன். ஓகேவா?*

அப்புறம் நீ சொன்னியே எதையும் எதிர்பார்க்காதே. அதை நா 80% ஏத்துப்பேன். ஏண்டா கழுதை பாவம் பையனுன்னு ஒன் ஹவர் கட் அடுச்சுட்டு உனக்கு லெட்டர் எழுதினா நீ என்னடான்னா ரொம்ப ஸ்பீடு ன்னு சொல்றே..ம்.

நீ என்னை கவனிச்சேன்னு சொன்னே. வித்தியாசமா இருக்கேன்னு சொன்னே, நா ஒண்ணு சொல்லட்டுமா?

ஒரு மனுஷனுக்கு உண்மையான லைஃப் என்னன்னு தெரியப்பவே முக்கால்வாசி லைஃப் முடிஞ்சுறுமாம். ஒரு கவிஞர் சொல்லியிருக்கிறார். என்னைப் பொறுத்தவரைக்கும் நா பொறந்ததிலிருந்து எனக்கு தெரிஞ்சும் தெரியாமே யார், யாருக்கு எவ்வளவு கஷ்டம் கொடுத்திருப்பேன். நா கண்டிப்பா அதை ஃபியூச்சர்லதான் கரக்ட் பண்ணனும். இதைப்பத்தி பேசுனா பேசிக்கிட்டே இருக்கணும். லைஃப், வேர்ல்ட், சொசைட்டி, பீப்புள் இதெல்லாம் எவ்வளவு பெரிய விஷயம் தெரியுமா? இதுல கத்துக்க வேண்டியது நிறைய இருக்கு. ஏ எல்லாருமே பெரியவங்கிட்டே ஆசி வாங்க சொல்றாங்க தெரியுமா? அவுங்க எல்லாத்தையும் அனுபவிச்சவங்க. எல்லாமே மே பி தெரியும். ஸோ அதுக்குத்தான் நா அந்த எக்ஸ்ப்ரீயன்சை அடையணும் னு நினைக்கிறேன். மேலே சொன்ன வரிகள் மாதிரி எனக்கு இருக்கக்கூடாது.

மெடிடேஷன் கன்ட்டினியூ பண்ணு. ரொம்ப நல்லது. நம்மால முடியாதது எதுவுமே கிடையாது. நா ஒண்ணு சொன்னா நீ நம்பணும். லவ்வ பொறுத்தவரைக்கும் நீ என்ன நினைக்கிறியோ அதை நானும் 1% மிஸ் ஆகாம நினைக்கிறேன். எனக்கு ஆச்சரியமாக இருக்குது எப்படி இப்படின்னு. நா இதை போன லெட்டர்ல எழுத வேண்டும் னு நினைச்சேன். ரியலி ஐ ஃபீல் தட்.

ஏ! என்னால நம்பவே முடியல. எப்படி? அந்த வேஸ்ட், இன்ஃபாக்சுவேஷன், செட்டில் எல்லாம் ஒரே மாதிரி. உண்மையாலும் என்னால நம்ப முடியல. இது நா எழுதுனேன்னு நினைச்சுக்கோ ஓகே.

உன்னோட லெட்டர் கட் பண்ணிட்டேன்னு தப்பா நினைக்காதே. என்னோட ஃபீலிங் உனக்கு புரியணும். தட்ஸ் ஆல். அப்புறம் என்னோட ஃபியூச்சர் கண்டிப்பா பிரைட் இருக்கும். நா எழுதினது வைச்சு நீ நம்பு. நிச்சயமா நா சாதிப்பேன். என்னால முடியாதது எதுவுமே இல்லை.

இந்த வேர்ல்ட்லயே நா ரொம்ப, ரொம்ப சந்தோஷமா இருக்கேன்.

என்னோட லைஃப் ஐ நா முழுசா அனுபவிக்கிறேன். ஒவ்வொரு நிமிஷமும் நா வாழுறேன். ஸோ, ஐ'ம் ஹேப்பி ஆல்வேய்ஸ். நிச்சயமா ஃப்யூச்சர்லேயும் சந்தோஷமாக இருப்பேன். நீ அந்த புக்கைப் படி நீயும் இப்படித்தா பேசுவ. ஓகேவா?

அப்புறம் உன்னோட ஃப்யூரான ப்ரெண்ட்ஷிப் கொடுத்ததுக்கு ரொம்ப.. ரொம்ப தேங்க்ஸ். நீ எனக்காக காதல் கொண்டேன் படத்தில் நெஞ்சோடு கலந்திடு சாங் கேளு. ஓகே. ஐ ஃபீல் தட் லைன்ஸ் டு யூ ஒ ட்ரீட் டு யூ தட் மீனிங் ஓகே.

நா உன்னை எப்படி நினைக்கிறேன், எப்படி இருப்பேன் அப்படின்னு அது புரிய வைக்கும் . அதை கண்டிப்பா கேளு. ப்ளீஸ். அப்போ என்னைப்பத்தி உனக்குத் தெரியும். இன்க்ளூடிங் அவர் ரிலெசன்ஷிப்.

அப்புறம் ஹேப்பி நியூ இயர். இந்த வருஷத்திலே நீ நினைச்சது எல்லாமே நடக்கும். நீ நினைச்சதை சாதிப்பாய். கண்டிப்பா. உனக்கு எல்லாருமே நல்லவங்களா தெரிவாங்க. எதுக்கும் ஃபீல் பண்ணாதே. உனக்காகத்தான் இந்த உலகம், இயற்கை, மனிதன் எல்லாமே நீ வாழத்தான் படைக்கப்பட்டதுன்னு நினைச்சுக்கோ! நிச்சயமா நீ ஒவ்வொரு நிமிஷமும் சந்தோஷமா இருப்பாய்.

எப்படி என் விஷ்ஷிங் அடிக்கடி படி, நல்ல யூஸ் இருக்கும். சரியா?
நாம கடைசிவரைக்கும் கான்டாக்ட் பண்றமோ, இல்லையோ பட் என்னோட விஷ் உனக்கு ஷ்யூர் இருக்கும். நீ இருக்கும் வரை. ஆல் தி பெஸ்ட் ஒன்லி ஃபார் யூ.

ஓகேம்மா,
சுபா

## துணைநின்றவை

லினக்ஸ் மின்ட் 11
லிப்ரே ஆஃபீஸ் 4
ஐபஸ் தமிழ் மென்பொருள்
இன்க்ஸ்கேப் 0.48
ஜிம்ப் 2.8

நன்றி!